காலங்களில் ஏற்படும் சூதகவலியை வெளிப்படையாகக் கூறினால் ஏதோ கருப்பை நோயினால் அவதியுறுகிறாள் என்று பிறர் எண்ணினால் மணமாவதற்குத் தங்கட்குத் தடை ஏற்படும் என்று அஞ்சுவதாலும், திருமணமானவர்களாயிருப்பின் மகப்பேறு எய்தாமல் போகுமோ என்ற நினைப்பாலும் சுய குறிகுணங்களைக் கூறார். குழந்தை பெறாத மலடுகளும் இவ்வாறே. இவ்வித எண்ணங்களை எல்லாம் தவறாக உணர்த்தியவர்கள். அவர்கள் தோழிகளும், நண்பர்களு மேயாவர். நன்றாக சடபரிசோதனை செய்து முடித்த மருத்துவர் இவற்றைக் களைந்து அவர்களுக்கு ஆறுதல் கூறுவது முதற் கடமையாகும். இவற்றைவிட இன்னும் சில எண்ணங்கள் சிலரிடம் மனதில் வேரூன்றியிருக்கும். அவற்றை ஆய்வது மனோதத்துவ ரீதியாகும். மகளிர் மருத்துவமனைகளில் மகளிர் நோயினரைக் கூர்ந்து கவனிக்குமளவில் அவர்கள் மனோகிளர்ச்சி விவகாரங்களையுடைய சிக்கல்களைச் சடக்குறிகளாக வெளிப்படுத்துகிறார்கள் என்றாலும் இவ்வகையாக உண்மையான மனோ விகர்ப்ப எழுச்சிகள் சடக் குறிகளாக உள்ளிடைச் சுரப்பிக் கோளங்களின் கோளாறு களினால் ஏற்படும் என்றும் அறியவும். முக்கியமாக, சூதகத்தடை, பெரும்பாடு போன்றவைகள் காணலாம்.

மகளிரின் மனோதத்துவத்தை விளக்கமாக பிற மனோ தத்துவ தர்க்க நூற்களில் கற்றுணர வேண்டுமேயொழிய, இம் மருத்துவத்தில் எழுதவும் இடம் போதாது, அவற்றை விளக்கமாக,எழுதிட சொல் வன்மையும் இல்லை. இங்கு மகளிரின் மனோதத்துவத்தைக் கீழ்க்கண்ட வரிகளால் சுருக்கமாக,தெளிவுபடுத்த முடியும் எனலாம். அவையாவன.

1. இளமைப்பருவத்தில் மனதில் தேங்கிய மனோ பாவனைகள் பிற்கால மங்கைப் பருவத்தில் கிளர்ந்து மனோ விகற்பமாக ஏற்படல்.

2. இளமையில் தாய் தந்தையரின் முக்கியமாக, தாயின் அன்பான பராமரிப்பு இல்லாக்குறை, அதனால் உறவு சம்பந்தம் இன்னதென்று அறியாமை போன்றவைகளால் பிற்காலத்தில் கணவன் மனைவி உறவு தெரியாமலாகிறது.

3. உடை, அலங்காரம், உணவு முதலியவைகளிலேயே நெடுநேரம் செலவழித்தல், பெற்றோர்கள் அவற்றைத் தம் மகளிரிடம் வற்புறுத்தல், புற உலக விவகாரங்களில் ஈடுபடாமை ஆகியவைகள்.

4. பெற்றோர்களின் கடுமையான ஒழுக்க உத்திரவுகள் (பெண்களின் பண்புகளான அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு ஆகியவை மிகவும் அளவு கடந்து காணல்).

5. காமக் கிளர்ச்சிக்கான கிரிகையில் ஈடுபடுவது குற்றம் என்று இளமையில் அறிவது.

6. இளமையில் தற்செயலாக ஆண்கள் சேர்க்கையால் ஏற்பட்ட வடுக்கள், பிற்காலத்தில் அவ்வடுக்களுக்குப் பயந்து கலவியை வெறுத்தல் கலவிக்குப் பயப்படல்.

7. உள்ளூர தன் தாயோடு வெறுப்பு.

8. இளமையில் தற்செயலாக ஏற்பட்ட பயம் பிற்காலத்தில் ஆண்களைக் கண்டால் வெறுப்பு அதனால் பெண்மை கோலத்தை வெறுத்தல்.

இன்னும் எத்தனையோ இளமையில் ஏற்பட்ட காரணங்கள் மங்கைப் பருவத்தில் சடக் குறிகளாக மகளிரைப்

பாதிக்கின்றன. இவற்றை மனோதத்துவ அறிவியலறிஞர்கள் ஆய்வுற்று நூற்களாக விளக்கமாக எழுதியுள்ளனர். அதனை மருத்துவ மாணவர்கள் கற்றுணரவும். அன்றியும் மகளிருக்கு வாழ்வில் முறையாக நடக்கும் நிகழ்ச்சிகளான,

1. பூப்பு அடைதல்
2. பூப்பு
3. புணர்ச்சி
4. சூல் கொள்ளுதல்
5. பாலூட்டல்
6. பூப்பு முடிவெய்தல்

போன்றவை எல்லாம் மகளிரின் மகத்தான மனோநிலையை மாற்றமடையச் செய்யும் நிகழ்ச்சிகளாகும். இளமைப்பருவ முதல் பூப்பு முடிவடையும்வரை வரிசை முறையாக மனோதத்துவங்கள் அடுத்தடுத்து மாறி மாறி அவற்றை மிதந்து செல்லும் வாழ்க்கையாக மகளிருக்கு அமைந்துள்ளன. அதற்கேற்ப உடலமைப்புகளும் அலங்காரங்களும் சேர்கின்றன.

பொதுவாக எல்லோர்க்கும் பயத்தினால் இதயம் படபடப்பதும், பேரவாவினால் சீரணக்கோளாறுகள் உண்டாவதைப் போல் மகளிருக்குச் சூதகக் கோளாறுகளில் மனோ எரிச்சலோ சோர்வோ ஏற்படுவது மரபாக உள்ளது. மகளிருக்குச் சூதகக் கோளாறுகளினால் மட்டுமே மனோ விகாரங்கள் ஏற்படுவது என்று கருதுவது தவறு. வாழ்க்கையில் பயம், துக்கம், சரியான வீடு வசதி இல்லாக்குறை, பழகிய

வீட்டை விட்டு வேறு புதிய வீட்டிற்கு மாறுதல், தொழில் மாற்றம், உற்றார் உறவினரை இழத்தலினால் உண்டாகும் துன்பம், குடும்ப மாற்றம் போன்றவை மகளிர் நோய்களை உண்டாக்கக் காரணங்களாகின்றன என்று உணர வேண்டும். குடும்பத்தில் ஆதரவும் அன்பும் பெறாத குறையினாலும் சீரண நோய்களும் மகளிர் நோய்களும் உண்டாகின்றன என்பது கண்கூடு.

மனித சமுதாயத்தில், பண்பாட்டு ஒழுக்க அதிகரிப்பாலும், சாதி மத கொள்கைகளைக் கடைபிடிப்பதாலும், அதன் வேறுபாட்டாலும், ஏழை பணக்காரர் என்ற பாகுபாட்டாலும் தொழிலாளி முதலாளி என்ற தத்துவத்தாலும், பெரும்பாலும் பாதிக்கப்படுபவர்கள் மகளிர்களே ஆவர். அதனால் அவர்கள் மனோ விகாரமடைகின்றனர். அம்மனோவிகாரங்கள் நாளடைவில் மகளிர் நோய்களாகப் பிரதிபலிக்கின்றன. இளமையில் மங்கையரிடத்து சுயேச்சையாய் காம உணர்வு செய்திகளைப் பெற்றோர்கள் நேர்முகமாகப் பேசாததினால் அவர்கள் அவைகளைப் பேசுவதும் கலந்து ஆலோசிப்பதும், கற்பதும் குற்றம் அல்லது பாவமான செயல் என்று எண்ணுவது, பெற்றோர்கள் தம் பெண்களைக் காம உணர்ச்சிக்கு வசப்படக்கூடாது என்று அடிக்கடி போதிப்பது, காம உணர்ச்சிகளைப் பருவகாலங்களில் வளரவிடாமல் அடக்குதல், திருமணம் காலந்தவறி நடப்பது போன்ற நிகழ்ச்சிகளால் மகளிர் பால் பெருத்த துன்பச்சுமை ஏற்படுவதால் மகளிர் நோய்கள் ஏற்படுகின்றன. மேலும் காம உணர்ச்சியைப் பூர்த்தி செய்துகொள்ள பிற பொருள்களால் சுய புணர்ச்சியில் ஈடுபடுவது போன்றவைகள் பிற்காலத்தில் ஏதோ பெரியகுற்றம் செய்த குற்றவாளிகளைப் போல பயப்படுதல், வரப்போகும் அவத்தைகளை யூகித்துக் துன்புறுதல் போன்றவற்றிற்கு ஆளாகிறார்கள். புணர்ச்சி நுட்பங்களைத் தெரியாமை, பணச் செல்வாக்கில்லா குறையால் நீண்டகாலம் புணர்ச்சியைத் தள்ளிப்போடுவது, அல்லது திருமணம் செய்து

கொள்ளாமலிருப்பதால் நேர்மையற்றப் புணர்ச்சியில் ஈடுபட்டுக் கருச்சிதைவு உண்டாக்கிக் கொள்வது போன்றவைகள் ஏற்படுகின்றன.

புணர்ச்சிக்கு இச்சை இன்மையும் புணர்ச்சி வலியும் ஒன்றோடொன்று தொடர்புடையன. இவைகள் முக்கியமாக, பெண்பாலர்க்கு விருப்பமின்மையும் யோனிச் சளிச் சுரப்பி இல்லாக் காலத்தும் புணர்ச்சி வலி உண்டாகும். மனோதத்துவர்கள் பெண்களுக்குப் புணர்ச்சியில் ஈடுபட விருப்பமில்லாவிட்டால் மேற்சொன்னவைகள் ஏற்படும் என்று கூறுகிறார்கள். சில மகளிர் புணர்ச்சியைத் தீமை என்று கருதுபவர்கள், ஏதோ மனைவி என்ற கடமைக்காகப் புணர்ச்சிக்கு இசைவார்கள். ஆனால் உண்மையான காம உணர்ச்சிக்கு வசப்பட்டு புணர்ச்சிக்கு உடந்தையானவர்களாகார். இளமையில் அறியாத்தன்மையால் வாலிபர்களின் வலுக்கட்டாயப் புணர்ச்சியின் பயங்கர நினைவுகள், மங்கைப் பருவத்தில் சாதாரண புணர்ச்சிக்கு மறுப்பதற்குக் காரணமாகின்றன. புணர்ச்சியின் நுட்பம் தெரியாமல் தாறுமாறாக, காம உணர்ச்சிகளை உண்டாக்கி, துன்பப் புணர்ச்சியால் புணர்ச்சி வலி உண்டாகும். ஆகையால் மருத்துவர் இரு தரத்தாரோடு நிதானமாகப் புணர்ச்சி நுட்பத்தை விவாதித்து ஆலோசனை கூறினால் சரியாகும். புணர்ச்சிக்கு முன் காம ஊடல் பேச்சுக்கள் நிகழ்த்தி ஆண்கள் அவசரப்படாமல் நிதானமான புணர்ச்சியை நிகழ்த்தினால் புணர்ச்சி வலியை ஒருவாறு பரிகரிக்கலாம்.

சில சமயங்களில் திருமணமான மங்கையர்களுக்குச் சூல் கொள்ள ஏக்கமுற்றவர்களுக்குப் புணர்ச்சியில் வலியுண்டாகும். அல்லது சூல் கொள்ளுமே என்ற பயத்தினாலும் புணர்ச்சி வலியுண்டாகும். புணர்ச்சிக்குப் பிறகு முதுகு குறுக்கு வலி ஏற்பட்டால் வலி நோய் எனலாம். ஆனால் புணர்ச்சியில் நிறைவு

கொள்ளாவிட்டாலும் முதுகு குறுக்கு வலி ஏற்படலாம் என்பதையும் உணர்தல் வேண்டும். சில வேளை ஆண்கள் காம உணர்ச்சியைத் திருப்திகரமாக பூர்த்தி செய்யாததினாலும், புணர்ச்சியை விட்டுவிட்டு நெடு நேரம் செய்தும் திருப்திகரமாக முடியாவிட்டாலும் முதுகு வலியுண்டாகலாம். இவர்களுக்கு வேறு முறை புணர்ச்சி வகைகளைக் கூறவேண்டும்.

எந்நாட்டிலும் இளம் பெண்களுக்குப் பூப்படைதலை இன்னவிதமாக நிகழும் என்று முன்கூட்டியே பெற்றோர்களும் சரி, பூப்படைந்த மங்கையர்களும் சரி சொல்லுவதில்லை. பூப்படைந்த பிறகு தோழியர்கள் ஒருவரோடு ஒருவரும் அதைப்பற்றி பேசுவதில்லை. திடீரென்று எதிர்பாராத காலத்தில் முதல் பூப்படைந்த மங்கை பூப்பு நிகழ்ச்சியைப் பயத்தோடு கோழையாக ஏற்கிறாள். இக்காலங்களில் மங்கையர்களைத் தீண்டாமை, அசுத்தமானவர்கள், தினசரி அலுவல்களை நிறுத்திவிடுவது போன்ற ஆசார வழி முறைகளைப் பலவந்தமாகக் கடைப்பிடிப்பதனால் சூதகவலிகள் உண்டாகின்றன என்று கண்டுள்ளனர். கருவுண்டாவதின் நிகழ்வுகளை அறியாமையால் பற்பலவிதமாக, பயங்கரமான கதைகள் கேள்விப்படுவதால் மங்கையர்கள் மகப்பேறு காலங்களில் கோழைகளாகி மகப்பேறு வலியைத் தாங்க முடியாமல் அநேக அவத்தைகளுக்குள்ளாகிறார்கள்.

பண்பாட்டு ஒழுக்கங்களினால் சில மூட நம்பிக்கைகள் உண்டாவதில்லை எனலாம். ஆனால் சில மூதாட்டிகள் பொழுதுபோக்காக, குதூகலமாக சில கட்டுக்கதைகளைப் பெண்கள் சமுதாயத்தில் பரப்புவார்கள். அவைகள் மங்கையர்களைப் பெரிதும் பாதிக்கின்றன. இதைவிட பூப்பு முடிவைப்பற்றிக் கேட்கத்தகாத கதைகளைப் பரப்பியுள்ளனர். இதனால் அநேக மகளிர் பூப்பு முடிவில் துன்பமடையப் போகிறோமே என்று பயத்துடன் எதிர்

நோக்குவார்கள். ஆனால் தற்கால மருத்துவப் பிரச்சாரத்தினால் எத்தனையோ கட்டுக் கதைகள் தகர்த்தெறியப்பட்டன. ஆனால் சிலர் பூப்பு முடிவில் அவுத்தையுறுவது மறுக்க முடியாத உண்மையாகும் என்பதும் கவனிக்கத்தக்கதாகும்.

குழந்தையினைப் பெறாத மகளிருக்குப் பூப்பு முடிவடையப் போகிற நிலவரம் பெரும் ஏக்கத்தை யுண்டாக்கும். அதனால் மனோவியாகூல நோய் உண்டாகும். மேலும் பூப்பு முடிவு காமக் கிழத்தியாக இருக்க முடியாமல் மூதாட்டி ஆவதை எண்ணிப் பெரும் ஏக்கம் கொள்வார்கள். பூப்பு முடிவு காலத்தில் தீவிரப் பெரும்பாடு, கருப்பைப் புற்றுநோய் வருகிற குறியானபடியால் அதில் மகளிருக்குச் சொல்லொணாப் பயம் ஏற்படும். பூப்பு முடிவடைவது கருப்பையின் அபரினாமச் செயலாகையால் இரவில் தூக்கமின்மை, இனி புணர்ச்சியில் ஈடுபட முடியாமை ஆகிய ஏக்க உணர்ச்சிகள் உண்டாகும். கணவன்மார்கள் தங்களை நிராகரிப்பார்களோ என்ற பயம் ஏற்படும். இவர்கள் தகுந்த மருத்துவர்களைக் கண்டு பரிகாரம் தேடவும். இல்லையேல் இவர்கள் தற்கொலை செய்து கொள்ளவும் துணிவார்கள்.

எனவே, மகளிர் நோயைக் கணிக்கப் புகுங்கால் சடபரிசோதனை முதற்கண் செய்து உடலுறுப்புகள் பாதிக்கப் படவில்லை என்று தீர்மானித்த பிறகே மனோவிகற்ப நோய் எனக் கொள்ளவேண்டும். மகளிர் கூறும் குறி குணங்களைக் கொண்டு திடீரென்று நோயைக் கணிப்பது தவறாகும்.

முதல் சந்திப்பிலேயே மருத்துவர் மகளிரின் மனோ நோயைக் கணிப்பதும் கடினம். இம்மாதிரியான காலங்களில் குடும்ப மருத்துவர்பால் அனுப்பிவிடவும். குடும்ப மருத்துவர் இல்லாத காலங்களில் அவகாசமாக அம்மகளிரை வினாவுதல் வேண்டும். குடும்ப பராமரிப்பு, குடும்பக்கதைகள், உறவினரின்

பராமரிப்பு, தொழில், செல்வாக்கு, வசதிகள் போன்றவைகளை நன்றாக ஆராயவேண்டும். சடபரிசோதனையினால் அறிந்த குறி குணங்களையும் குடும்ப வரலாற்றையும் பழக்க வழக்கங்களால் ஏற்பட்ட குறி குணங்களையும் ஒத்திட்டு பார்த்திடல் வேண்டும்.

மன நோயால் பாதிக்கப்பட்ட மகளிரை இருவகையாகப் பிரிக்கலாம்.

1.மதி நுட்பமுடைய நோயினர்

2. மதி நுட்பமிலா நோயினர்.

முதல் தரத்தார் அதிகமாகப் பேசுவார்கள். புதிய புதிய குறிகுணங்களைச் சுயமாகப் பிறப்பித்துச் சொல்வார்கள். ஆனால் அவர்களோடு விவாதித்து ஆலோசனை கூறி சரிப்படுத்தலாம். மற்றவர்களைச் சரிப்படுத்துவது கடினம். ஆகையால் இவ்வகையானவர்களை மனோதத்துவ அறிவியலறிஞர்களிடம் விட்டுவிடுவது நல்லது. இல்லையேல் இவர்கள் என்றும் நோயினர், உண்மையில் நோயினர் அல்லர் என்ற தத்துவத்திற்கு விளக்கம் காணமுடியும்.



# பிரிவு மூன்று

## கரு உறுப்புகளில் காணும் பிறநோய்கள்

*இயல் - 13 மறவைக் கட்டிகள்*

*இயல் - 14 வீக்கம்*

## இயல் - 13

# மறவைக் கட்டிகள்

மறவைக் கட்டிகள் பெண் கருஉறுப்புகளின் கருப்பையிலும் சினைப்பையிலும் தோன்றுகின்றன. அவைகளின் வளர்ச்சி நோயாளியின் உயிருக்கு எந்த அளவிலும் தீங்கு பயக்கக்கூடும். அவை

1) நன்மறவைக் கட்டிகள் ( Benign tumors )

2) நஞ்சு மறவைக் கட்டிகள் ( Malignant tumors ) என்று பிரிக்கப்படுகின்றன.

**நன்மறவைக் கட்டிகள் :**

1) இக்கட்டிகள் மெதுவாகத் தோன்றி வளர்கின்றன.

2) பிற உறுப்புகளுக்கு பரவுவதில்லை.

3) துணை வளர்ச்சியை, விப்புருதியை ( Metastasis ) உண்டு பண்ணுவதில்லை.

4) நோயாளியின் உடல்நிலையையும் மிக விரைவில் மெலியச் செய்வதில்லை.

**நஞ்சு மறவைக் கட்டிகள் :**

1) மிக விரைவில் வளர்கின்றன.

2) மாதர்க்கு மிக வேதனையையும், உடல் தேயுமளவுக்குச் சீர்கேடான உடல்நிலையையும் உண்டாக்குகின்றது.

3) நஞ்சு மறவைக் கட்டிக்ளின் அணுக்கள் அருகில் உள்ள தசைகளுக்கும் உள்ளுறுப்புகளுக்கும் விரைவில் பரவி வளர்ந்து இரத்த வழியாகவும், நெறி ஊன் வழியாகவும் பிற இடத்திற்கு எடுத்துச் செல்லப்படுகின்றன. அகக்காரணம் பற்றி புதிய நச்சு மறவைக்கட்டிகள் வேறு எவ்விடத்திலும் தோன்றலாம்.

**நன்மறவைக் கட்டிகள் :**

இது இரு வகைப்படும்.

1) பைக்கட்டிகள் *(Cystomas)*

2) நார்த்தசைக்கட்டிகள் *(Fibromyomas)*

**பைக்கட்டிகள் :**

இக்கட்டிகள் பெரும்பாலும் சினைப் பையில்தான் வளர்கின்றன. சில சமயங்களில் அவை மிகப் பெரியதாகவும் வளர்கின்றன. இப்பைக்கட்டிகளில் உட்பொருள்கள் சேரச்சேர அதனுடைய உட்குடுவையானது பருக்கின்றது. அதன் சுவர்கள் மென்மையாகின்றன. முடிவில் ஓர் நீர் நிறைந்த பையைப்போல் காணப்படுகின்றன. சாதாரணமாக வழவழப்பான பரப்பை யுடையது. ஆனாலும் சில சமயங்களில் அவைகளுடைய சுவர்களின் பரப்பின்மேல் ( உட்புறத்திலும், வெளிப்புறத்திலும்) பருக்கள் போன்ற வளர்ச்சி காணப்படுகின்றன. இவைகள் சினைப்பைகளின் பருப்பைகள் என்று அழைக்கப்படுகின்றன

(Papillary Cystomas of the Ovary). சில பைக்கட்டிகள் சினைப்பைகள் சுரப்பிகளினின்றும் தோன்றுகின்றன. இவ்வாறான நிலைகளில் வழக்கமாக வீக்கங்கள் ஏற்பட்டதின் காரணமாகச் சுரப்பியின் குழலில் தடை ஏற்பட்டு அவைகளில் கசிவு நீர் சேர்ந்து தங்குவதோடு சிறுப்பைக்கட்டிகள் வேதனை தரும். உணர்ச்சியை தராததினால் கண்டுபிடிக்கப்படாமலேயே பெரும்பாலும் இருந்துவிடுகின்றன. ஆனால் பெரிய கட்டிகள் அருகிலுள்ள உறுப்புகளின் மேல் அழுந்தி நோவை உண்டுபண்ணும். பைக்கட்டிகளின் காம்பானது திருகிக் கொண்டால் குறிப்பிடத்தக்க அளவிற்குரிய மிகுதியான கடும் நோயை உண்டுபண்ணுகின்றன. காம்பானது மிக நீளமாக இருக்குமானால் கட்டியானது சிறுகுடலின் வளைவு ஒன்றையும் தாண்டிச்சென்று அதை இறுக்கிக் கட்டிவிடக்கூடும். காம்பானது முறுக்குண்டு சிறுகுடலின் அடைவை உண்டு பண்ணி அடிவயிற்றில் மிகுதியான அளவு உப்பிக் கொள்ளல், வலி, காடி நிற வாந்தி எடுத்தல் ஆகியவை உண்டாகும். கருப்பை உடம்பின் நார்த்தசைக்கட்டிகள் என்றும் (FIbromyomas of the corpus uteri) கருப்பைக் கழுந்தின் நார்த்தசைக்கட்டிகள் என்றும் (Fibromyomas of the cervix uteri) கட்டிகள் பொருந்தியுள்ள இடத்தைப் பொருத்து பெயரிட்டு பிரித்தறியப்படுகின்றது. ஆனால் கருப்பைக் கழுந்தின் நார்த்தசைக்கட்டிகள் மிகக் குறைந்த அளவில் தான் காணப்படுகின்றன.

**கருப்பை உடம்பின் நார்த்தசைக் கட்டிகள் 3 வகைப்படும் :**

1) கருப்பைக் கழுந்தின் வெளிப்புறத்தில் இருந்து வளர்ந்து கருப்பையைச் சுற்றியுள்ள வயிற்றுப்பசைச் சவ்வின் கீழ் இடம் பெற்றுள்ள கட்டிகள். இவை வயிற்றுப்பசைச் சவ்வின் கீழுள்ள நார்த்தசைக்கட்டிகள் (Subperitioneal Fibromyomas)

அல்லது

**பசைச்சவ்வின் கீழுள்ள நார்த்தசைக் (Subserous Fibromyomas) கட்டிகள்** என்று கூறப்படுகிறது.

2) கருப்பைச் சுவரிலிருந்து தோன்றி ஆனாலும் கருப்பையின் உட்புறத்தையோ, வெளிப் புறத்தையோ நோக்கி வளராது கருப்பைச் சுவரிலேயே வளரும் கட்டிகள். இவை **தசையிடைப்பட்ட நார்த்தசைக் கட்டிகள்** என அழைக்கப்படும். *(Interstitial Fibromyomas)*

3) கருப்பைச் சுவரிலிருந்து தோன்றி கருப்பைக் கூடத்திற்கும் பரவி கருப்பைச் சுவரின் உட்புறத்தசைச் சவ்வை அழுத்தி தள்ளி மெல்லியதாக்கி சிலசமயங்களில் அச்சவ்வைக் கிழியச் செய்கின்ற கட்டிகள் பசைச்சவ்வின் சீழ்படலத்து **நார்த்தசைக் கட்டிகள்** என்று அழைக்கப்படுகின்றன.(Submucous Fibromyomas)

கருப்பையின் மற்ற வகைக் கட்டிகளைக் காட்டிலும் நார்த்தசைக் கட்டிகள்தான் பெருமளவில் அடிக்கடி ஏற்படுகின்றன. சாதாரணமாக அவைகள் 35 முதல் 40 வயது வரை தோன்றுகின்றன. சில சமயங்களில் இளமங்கையரிடத்தும் தோன்றுகின்றன. இத்தகைய கட்டிகள் பெரும்பாலும் மகப்பேறில்லாத மகளிருக்கும், மலடிகளுக்கும் தான் ஏற்படுகின்றன.

### குறிகுணங்கள் :

இவை இந்தக் கட்டிகளின் தன்மைகளையும் அவற்றின் உருவ அளவையும், அவை ஏற்பட்டுள்ள இடங்களையும் பொறுத்து இருக்கும். தசையிடைப்பட்ட நார்த்தசைக் கட்டிகள்தான் மிகக் குறைவான குறிகுணங்களை

வெளிப்படுத்துகின்றன. பெரும்பாலும் இவை எத்தகைய தொந்தரவையும் தருவதில்லை. கட்டிகள் பெரு அளவாகி வளரும் போதுதான், அருகிலுள்ள உறுப்புகளின் மேல் அழுந்தி வேதனையைத் தருகின்றன. சில சமயங்களில் இந்த தசையிடைப்பட்ட நார்த்தசைக்கட்டிகள் மிகவும் அதிகமாக வெகுநாட்களுக்குக் காணப்படும். மாதவிடாய்க்குக் காரணமாகவும், மருத்துவரை அணுகி அவருடைய அறிவுரையைக் கோருவதற்குத் தூண்டுகோலாகவும் இருக்கக்கூடும்.

வயிற்றுப்பசைச் சவ்வின் கீழுள்ள நார்த்தசைக்கட்டிகள் மிகப்பெரியனவாக இல்லாவிட்டால் அவை எத்தகைய வேதனையையும் தருவன அல்ல. அப்படியின்றி இவை மிகப்பெரியனவாக வளருமேயானால் அவைகள் தம்முடைய வயிற்றுப்பசைச் சவ்வினால் ஆன போர்வையை விரியச்செய்து நோயை உண்டு பண்ணும். பசைச்சவ்வின் கீழ்படலத்தில் அமைந்துள்ள நார்த் தசைக்கட்டிகள் கருப்பை அறையினுள்ளும் பரவி விரிந்து வளர்ந்து கருப்பையின் உட்புறச்சவ்வினைத் தள்ளி மெல்லியதாக்குகின்றன. இக்காரணம் பற்றி மாதவிடாய் காலத்து குருதிப்போக்கு மிகுவதோடு அல்லாமல் மாதவிடாய் காலத்து சம்பந்தப்படாத இடைக்காலத்தில் மிகுதியான குருதிப்பெருக்கை உண்டு பண்ணுகின்றன. இவ்வாறான நிலைகளில் முறைதிருந்திய மாதவிடாய் ஏற்படுவதாக மாதர் கூறுவர். இதைப்போன்ற குருதிப்பெருக்குகள் கருப்பைச் சிலந்தி கட்டியாலும் ஏற்படும். (சிலந்திப் பூச்சியைப் போல் பல கால்களை உடையது).எந்தப் பசை சவ்வு படலத்திலிருந்தும் கருப்பைக் கழுந்து போன்ற இடத்திலிருந்தும் இவ்வாறான பல கால்களை உடைய கட்டிகள் உண்டாகலாம். இவை கருப்பை பசைச்சவ்வின் அழற்சியை இடைவிடாது தூண்டிவிட்டு

கருப்பையின் சுருக்க இறுக்கங்கள் ஏற்படுவதைத் தவிர்த்து குருதிப்பெருக்கை நிகழச் செய்கின்றன.

### மருத்துவம் :

நார்த்தசைக் கட்டிகள் எவ்வித தொந்தரவையும் தராதவரையில் எந்த மருத்துவமும் தேவையில்லை. தொந்தரவு தரும் போது அவைகளை அறுவை மருத்துவம் மூலம் நீக்க வேண்டும். சிலசமயங்களில் சிறிய கட்டிகள் பூப்பு முடிவில் தானாகவே மறைந்து விடுகின்றன. அவ்வாறன்றி வளர்ந்து வலியைத் தோற்றுவிக்குமேயானால் உடன் அறுவை மருத்துவம் செய்ய வேண்டும். மிகுதியாக குருதிப்பெருக்கை உண்டு பண்ணும் கட்டிகள் 40 வயது வரை சிறிதாக இருக்குமானால் குருதியை உறையச் செய்யும் மருந்துகளை முதலில் கொடுக்கலாம். நீண்ட காலத்திற்கு இம்மருந்துகளைக் கொடுத்தும் குருதிப்பெருக்கு நிற்காமல் மிகுதியானால் அறுத்தெடுப்பது சிறந்தது.

### நச்சுமறவைக் கட்டிகள் (Malignant Tumors) :

பெண் கரு உறுப்புகளில் பெரும்பாலும் கருப்பையில் தான் புற்றுநோய் அதிகமாகக் காணப்படுகிறது. கருப்பையின் உடம்பில் ஏற்படுவதைவிட கருப்பைக் கழுந்தில்தான் 90% முதல் 95% அதிகமாக ஏற்படுவதாகக் கண்டறியப்பட்டுள்ளது. இது பெரும்பாலும் வயது முதிர்ந்த பெண்களைத்தான் பற்றுகின்றது. ஆனால் இளம் பருவ மங்கையரும் இதற்கு விதிவிலக்கல்ல.

இக்கொடிய நோயைக் கட்டுப்படுத்த எடுத்துக்கொள்ள வேண்டிய மிக முக்கியமான நடவடிக்கை என்னவெனில் இந்நோயைக் கூடுமானவரை ஆரம்பத்திலேயே கண்டு நிதானித்து உறுதிச்செய்வதும் தொடக்கத்திலேயே அதன்

வளர்ச்சியைத் தடை செய்வதுமாகும். பிற நோய்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது கருப்பையில் ஏற்படும் புற்றுநோயைக் கண்டறிவது மிகவும் எளிதாகும். ஏனெனில் கருப்பையானது குறிப்பிடும் இடம், அளவு சிறப்பாக, அதன் கழுந்தானது மற்ற எந்த உறுப்பையும் விட ஆய்விற்கு எளிதில் அணுகத்தக்க இயல்புடையதாகும்.

### கருப்பைக்கழுந்தின் புற்றுநோய் :

35 முதல் 40 வயது வரை கருப்பைக்கழுந்து தொடக்கநிலையில் உள்ள புற்று நோயில்(Incipient Cancer) குறிகுணங்கள் முதல் நிலையில் புறக்கணிக்கத்தக்க அளவு அற்பமானதாக இருப்பதால் நோயாளிகள் அதில் சிறிது கவனமும் செலுத்துவதில்லை. வலிகள் இருப்பதில்லை. கசிவுகள் மட்டும் ஓரளவிற்கு அதிகப்படுகின்றன. முதலில் அளவு கடந்து காணப்படுகின்ற வெண்தீட்டு பின்பு இரத்தம் கலந்து காணப்பட தொடங்குகின்றது.சிலசமயம் மாதவிடாய் காலங்களில் உதிரம் போகும் காலம் அளவு கடந்து காணப்படுகின்றது அல்லது மாதவிடாய் ஏற்பட்ட ஓரிரண்டு நாட்களில் மீண்டும் இரத்தம் கலந்த செங்கல் நிற மங்கலான கசிவு காணப்படுகிறது. மாதவிடாய் கழிந்த பின்பு இடைப்பட்ட நாட்களில் இரத்தம் கழிந்து செங்கல் நிற மங்கலான கசிவுகள் காணப் படுகின்றன.புணர்ச்சியின் பின்பும், மலத்தை முயற்சி செய்து கழிக்கும் போதும் சில சமயங்களில் உதிரப்போக்கு ஏற்படுகிறது.

கருப்பைக் கழுந்தின் தொடக்க நிலைப்புற்று நோயாளியை ஆய்வு செய்து பார்க்கும் பொழுது கருப்பைக் கழுந்தின் புறத்தில் அரிப்புகள் தென்படுகின்றன.

புற்றுநோய் அரிப்பு என்பது (CancerErosion) கருப்பையினுடைய வெளிவாயிலில் ஏதோவொரு புறத்தில் புண்பட்ட பகுதியைக் கொண்ட ஒரு பரப்பாகும். இப்பகுதியில் எத்தகைய சேர்க்கை முறையிலான ஊறு ஏற்பட்டாலும் உடனே அதிக குருதி பெருகும். இவ்வாறான புண்பட்ட பரப்பையன்றி சில சமயங்களில் பிறிதொன்றும் காணப்படுவதில்லை. கருப்பைக் கழுந்தின் வீக்கம், கசிவுகள் ஆகியவற்றைத் தவிர கருப்பையினுடைய வெளிவாய்ப் பகுதியில் ஏதேனும் ஒரு சிறு புண்ணோ (அ) மிகுதியான செம்மை நிறமோ காணப்பட்டால் அதை நன்றாக ஆய்வு செய்யவேண்டும். அதுவும் சிறப்பாக வெள்ளைத் தீட்டு பட்டுக் கொண்டே இருப்பவர்கள் அதை மிகுதியாகக் காணப்படுவது பற்றியோ அதனுடன் இரத்தம் கலந்து செங்கல் நிற மங்கலான கசிவு வெளிப்பட்டாலும் கூட அதைப்பற்றி கவலைப்பட்டு அதன்மேல் யாதொரு சிறப்பான கவனத்தையும் செலுத்துவதில்லை. பிறகு நோயின் போக்கானது வளர்கின்றது. கசிவுகள் மஞ்சள் பழுப்பு வண்ணத்தைப் பெறுகின்றன.தசைகள் அழுகத் தொடங்கிய பின் கசிவுகள் பழுப்பு நிறமாகின்றன. இத்தன்மையுடைய நோயின் போக்கானது மிகவும் அதிகமாக வளர்ந்துள்ள புற்று நோய் கட்டியைக் குறிப்பதாகும். இவைகளின் நோய், நுண்மங்கள் இருப்பதன் காரணத்தால் வடியும் கசிவுகள் முடை நாற்றம் வீசத் தொடங்குகின்றன. அவ்வாறான நோயாளி நம்மை அணுகும் போது சில சமயம் நோயின் தன்மையை அறிந்து கொள்ளப் போதுமானதாக இருக்கும். இவ்வாறான நோயானது மிகவும் முக்கிய நிலையில் உள்ளவர்களுக்கு யோனியின் கருப்பைக் கழுந்து முழுவதும் பெருத்த முளைகளை உடையதாய் இருப்பதாயும் அடுத்துள்ள யோனிச் சுவர்களுக்கு கட்டியானது வளர்ந்து பரவியுள்ளது என்பதையும் ஒரு விரலால் தொட்டுப்

பார்க்க எளிதில் உதிரத்தைச் சொறிகின்றது. ஆயும்போது பிரிந்து பிய்ந்துவிடும். அழுகிப் போன தசையானது விரல்களிலே ஒட்டிக் கொண்டிருக்கிறது. யோனியின் அளவுகளைக் கொண்டு ஆய்ந்து பார்க்கும்பொழுது கருப்பைக் கழுந்தானது ஒரு காலி பிளவரைப் போல காணப்படுகிறது. இவ்வளர்ச்சிப் போக்கானது கருப்பை புற அக ஒட்டுத் தசையை (Paramertric Connective Tissues) நோக்கிப் பரவுகின்றது. அங்கு செல்லும் நரம்பின் தண்டுகளையும் அடித்தண்டுகளையும் பீடிக்கின்றது. அதனால் பொறுக்க முடியாத வலி ஏற்படுகிறது. புற்றுநோயால் பீடிக்கப்பட்ட மறவைக் கட்டியானது அங்குள்ள உறுப்புகளுக்கும் பரவுகின்றது. மூத்திரப்பையினுள் ஒரு குடலிலும் பரவி புரைகள், பவுத்திரங்கள் ஏற்படுகின்றன. வெகு தொலைவில் உள்ள உறுப்புகளிலும் விப்புருதிகள், துணைக்கட்டிகள் உண்டாகின்றன. கட்டியானது கெட்டு அழுகிப் போவதால் உண்டாகும் பொருட்களால் உடம்பு முழுமையும் நஞ்சுத்தன்மை பரவி விடுகின்றது. அஞ்சத்தக்க அளவில் மிகுகின்ற உடல் மெலிவு, சீர்கேடு, பொதுவான உடல் தேய்வு படிப்படியாக வளர்கின்றது. இதிலிருந்து தெரிய வருவது மருத்துவம் செய்யப்படாத கருப்பைக் கழுந்தின் புற்று நோயானது 12 முதல் 18 மாதங்களுக்குள் சாவை உண்டாக்கும்.

***மருத்துவம் :***

இந்நோயில் முதல் குறிகுணம் தொடங்கியவுடனே மருத்துவரைக் கலந்து ஆலோசிக்க வேண்டும். அதுவும் சிறப்பாக மாதவிடாய் முற்றிலும் நின்ற பிறகு இரத்தம் கலந்த கோழையோடு கூடிய செங்கல் நிற மங்கலான கசிவுகள் குறைந்தது ஒரு தடவை ஏற்பட்டாலும் கூட அவர்கள் மருத்துவர்களை நாட வேண்டியது அவசியமாகும்.

தாமிர பற்பம், கருவங்க பற்பம், நந்தி மெழுகு, காவிக்கல் சூரணம், சேங்கொட்டை சேர்ந்த மருந்துகள், நத்தை, சிற்பி, சிலாசத்து, கொடிவேலி சேர்ந்த மருந்துகள் உள்ளுக்கு வழங்கலாம். வெளிப்பிரயோகம்–அருகன் தைலம்.

### கருப்பை உடம்பில் ஏற்படும் புற்றுநோய் :
### (Cancer of the corpus uteri)

கருப்பை உடம்பில் ஏற்படும் புற்றுநோயானது மிகவும் மெதுவாகத்தான் வளர்கின்றது. அதுவும் மிகவும் நீண்ட காலத்திற்கும் கூட அது கருப்பையைத் தாண்டி பரவி வளர்வதில்லை. இவ்வாறான நிலையில் உள்ள புற்று நோயாளி களுக்கு இரத்தம் கலந்த செங்கல் நிற மங்கலான கோழைக்கசிவுகள் முறை தவறியனவாகக் காணப்படுகின்றன. மாதவிடாய் முற்றிலுமே நின்றுவிட்டபிறகு பேரிளம் பெண் பருவத்தில் காணப்படுகின்றன. இதில் மேல்நாட்டு மருத்துவ முறையில் கருப்பை அகத்தின் பசைச்சவ்வை சுரண்டி நறுக்கி எடுத்த மாதிரி தசையினை ஆய்வு செய்து அதன் பேரில் கருப்பையின் உடம்பில் புற்றுநோயானது கண்டறியப் படுகின்றது.

### மருத்துவம் :

கருப்பையினுள் புற்றுநோயைத் தீர்ப்பதற்கான அடிப்படை மேல்நாட்டு மருத்துவ முறையானது கருப்பை அதைச்சுற்றியுள்ள தசையுடன் சேர்த்து வெட்டி அறுத்து விடுவதாகும்.ஆனால் தொடக்க நிலையில் உள்ள புற்று நோய்க்குதான் இம்முறை ஏற்றது எனக் கூறப்படுகிறது. மற்றும் பிற நிலைகளில் உள்ள புற்றுநோய்க்கு எல்லாம் அறுவை மருத்துவமானது ரேடியம் கதிர்களால் செய்யப்படுகிறது. சரிவர கவனியாது விடப்பட்ட புற்றுநோய்

நிலைகளுக்கு அதாவது புற்றுநோயில் பீடிக்கப்பட்டவர்களுக்கு இந்த மருத்துவ முறையும் கூட நல்ல பயனைத் தர தவறிவிடுகின்றன.

சுற்றியுள்ள தசைகளுக்கு அருகிலுள்ள நெறி முடிச்சுகளுக்கும் கூட சிறிதுகாலம் தாழ்ந்து நோயானது மீண்டும் வருகின்றது. இவ்வாறான நிலைக்குச் செய்யப்படும் தொடர்ச்சி மருத்துவம் **தடுப்பு கதிர் பாய்ச்சல்** முறையாகும். மேலும் அறுவை மருத்துவத்தின்பின் எல்லா நோயாளிகளுக்கும் கதிர் பாய்ச்சல் செய்யப்படுகின்றது. அதில் எஞ்சியுள்ள புற்றுநோய் அழிந்து விடுகிறது.

அறுவை மருத்துவத்திற்கு முன்னரே கூட கதிர்பாய்ச்சல் செய்வதால் அது புற்றுநோய் வேகத்தைக் குறைத்து தணித்து அதன் போக்கைத்தடைப்படுத்தி நோய்வாய்ப்பட்ட தசைகளைச் சுருங்கச் செய்து அறுவை மருத்துவத்தின் விளைவை வெற்றிபெறச் செய்கிறது. துணைக் கட்டிகளும், ஓடு விப்புருதிகளும் வராமல் தடுக்கக் கூடும்.

**மருந்து :**

வங்கபற்பம், தாம்பிர பற்பம், தங்க பற்பம், முத்து பற்பம், சேராங்கொட்டை சேர்ந்த மருந்துகள்.

**நாத கருவங்களின் புற்றுநோய் (Cancer of the ovary) :**

நாத கருவங்களின் புற்று நோயானது கருப்பையினுடைய புற்றுநோயைவிட மிகக் குறைவாகத்தான் ஏற்படுகின்றது. அதைக் கண்டறிவதும் மிகவும் கடினமானதாகும். அது தொடக்கத்திலேயே தொலைவில் உள்ள உறுப்பு வரை சென்று துணைக் கட்டிகளை ஓடு விப்புருதிகளை உற்பத்தி செய்கிறது.

இவ்வாறாக நிலைகளில் இருகை ஆய்வுகளில் (Bimanual Examination) மூலமாகக் கட்டி மிக நன்றாக கண்டுபிடிக்கப்படுகிறது. இவ்வாறான நிலைகளுக்குச் சிறப்பாக அறுவை மூலமாகத்தான் மருத்துவம் செய்யப்படுகின்றது.

## யோனி அல்லது கடிதடம், புற உறுப்பு இவற்றில் தோன்றும் புற்றுநோய் :

இவ்வகைப்புற்றுநோய் நாத கருவங்களின் புற்றுநோயை விட குறைவாகத்தான் காணப்படுகிறது.

இதற்கு வங்க, தாம்பிரம், சேங்கொட்டை சேர்ந்த அல்லது இவற்றால் செய்யப்பட்ட மருந்துகளும், நந்திமெய் முதலியவைகளும் பயன்படுத்தப்படுகின்றன.

## ஒட்டுத்தசை நச்சு மறவைக் கட்டிகள் :

கருப்பையில் ஒட்டுத்தசை நச்சு மறவைக் கட்டிகள், கருப்பையினுள் ஏற்படும் புற்றுநோயைவிட மிகமிகக் குறைந்த அளவில்தான் காணப்படுகின்றன. ஒட்டுத்தசை நச்சு மறவைக் கட்டிகள் அவைகளின் மிக விரைவான வளர்ச்சிக்கும், மிகக் கொடுமையான நோய் போக்குக்கும் மிகப் பெயர் போனவை. அவை அடிக்கடி பெருமளவில் மிகுந்த தொலைவில் உள்ள உறுப்புகளின் துணைக்கட்டிகளையும் ஒட்டுவிப்புருதிகளையும் தோற்றுவிக்கின்றன. இவை புற்று நோயைப் போன்று நெறி, ஊன், நீர்க்குழல்களின் வழியாகப் பரவாமல் சிறப்பாக இரத்த நாளங்களின் வழியாகத்தான் பரவுகின்றன. நாதக் கருவங்கள் கூட இந்த ஒட்டுதசை நச்சு மறவைக் கட்டிகளால் பீடிக்கப்படுகின்றன.

ஒட்டுதசை நச்சு மறவைக்கட்டிகள் புற்றுநோயைப் போலன்றி இளம் பருவ மங்கையரிடத்து மிகுதியாகக் காணப்படுகிறது. இந்த கட்டிகள் மிக வேகமாக வளர்வதினால் எவ்வளவு முன்னதாக தொடக்கத்திலேயே செய்யமுடியுமோ அவ்வளவு விரைவாக மேல்நாட்டு மருத்துவமான அறுவை மருத்துவம் செய்து நோய்தடுக்கப்படுகிறது. மிகுதியான காலம்

தாழ்த்தப்பட்டிருந்தாலும் கதிர் பாய்ச்சல் மருத்துவம் செய்யப்படுகின்றது. ஒட்டுத்தசை நச்சுமறவைக் கட்டிகள் ஏற்பட்டுள்ள நிலைகளில் இம்மாதிரியான மருத்துவம் ஓரளவிற்குப் பலனை அளிக்கின்றதென கருதப்படுகின்றது.

### *நச்சு மறவைக் கட்டிகளைக் கட்டுப்படுத்தல் :*
### **(Cancer of malignant tumors)**

பெண் கருஉறுப்புகளில் ஏற்படும் புற்றுநோய்களுக்கு மருத்துவம் செய்வதில் அறுவை மருத்துவ வளர்ச்சிகளும், கதிர்ப் பாய்ச்சல் முறைகளிலும் முன்னேற்றமான வெற்றிகள் நிறைந்த அளவில் கிட்டியிருக்கின்றன. ஆயினும் இவைகள் போதுமானதாக இல்லை. புற்றுநோயானது தேவையான வகையில் மருத்துவ முறையில் முன்னேற்றமான வளர்ச்சியைக் கோருவதுடன் மட்டுமல்லாமல் இந்நோயைத் தொடக்க நிலையிலேயே காலாகாலத்தில் கண்டறிதல் மூலமாகத்தான் கட்டுப்படுத்த வேண்டும்.

### *மாதர் குறை தடுப்புமுறை ஆய்வுகள் :*
### **(Prophylactic Gynaecological Examination)**

பெண்கள் தங்கள் கருஉறுப்புகளின் நிலையில் அல்லது தன்மையில் மாறுதல்கள் ஏதேனும் ஏற்படுமேயானால் அவைகளை நோயாளி கனவு கண்டு தெரிவிப்பார்கள் என்று அவர்களையே நம்பியிருக்கக் கூடாது. புற்று நோயானது மிகவும் நயவஞ்சகமான நோயாகும். மிக நீண்ட காலம் அது தன்னை வெளிக்காட்டிக் கொள்வதில்லை. இக்காரணம் பற்றித்தான் 30 வயது நிரம்பிய எல்லா மாதருக்கும் அதற்கு மேற்பட்ட வயது உடையவர்களுக்கும் மாதவிடாயானது நிற்கத்தொடங்கி

விட்ட பேரிளம் பெண் மாதர்க்கும், குறிப்பிட்ட கால அளவிற்கு ஒரு முறை தொழில் பயிற்சியில் இவ்வாறாகத் தடுப்பு ஆய்வுகள் மாதருக்கு ஆண்டுக்கு ஒரு முறையாவது தேவைப்படுகின்றன.

இவ்வாறான ஆய்வுக் காலங்களில், நகில்களும் ஆராயப்படுகின்றன. ஏனெனில் புற்று நோயால் பற்றப்பட்ட புதுகட்டிகள் சில சமயங்களில் நகில்களிலும் காணப்படுவதால், நகில்களில் வலியே இல்லாத ஆனால் சினைப்பற்ற பகுதிகளும் அக்குளில் நெறி சுரப்பிகள் பழுத்தும் காணப்படுமேயானால் உடனடியாக மருத்துவரை நாடும்படி அறிவுரை சொல்ல வேண்டும்.

கருஉறுப்புகள் ஆய்வு அளவுகளைக் கொண்டு (Speculam) தவறாமல் பரிசோதிக்கப்படுகின்றன. கருப்பைக் கழுந்தில் அரிப்புகள் (Erosion) கண்டறியப்பட்ட மாதரும் அதுவன்றி கருப்பையிலிருந்து இரத்தம் கலந்து கோழை இடைவிட்டு வடிவதாக கண்டறியப்பட்ட மாதரும் உடனடியாக மருத்துவரை நாட வேண்டும். புற்று நோயானது காலாகாலத்தில் கண்டுபிடிக்கப்பட்டு அதற்கான மருத்துவம் செய்யப்படுமேயானால் நோயினுடைய கொல்லும் தன்மையான நிலையைத் தடுத்துவிட முடியும். நோயளிக்கு முன்கூட்டியே தன் ஐயப்பாடுகளைத் தெரிவிக்கக் கூடாது. ஏனெனில் புற்று நோயானது இல்லை என்று பின்பு உறுதியாக நிதானிக்கப்பட்டால் புற்றுநோய் இருக்கக்கூடும் என்ற ஓர் ஐயம் அவளுக்கு மிகப்பெரிய அதிரிச்சியைக் கொடுத்துவிடும்.



# இயல் - 14

# கருவுறுப்புகளின் வீக்கம் பற்றிய நோய்கள்

மாதர் நோய்கள் எல்லாவற்றிலும் கருவுறுப்புகளின் வீக்கம் ஒன்று தான் அடிக்கடி நிகழக் கூடிய ஒரு நோயாகும். வீக்கம் பற்றிய நோய்கள் மற்ற நோய் துன்பங்களை எளிதில் நுழைந்து பரவ வகைசெய்கின்றன. அதாவது இயல்பு நிலையைப் பிரிக்கும் நோய் நுண்மங்களை (Pathogenic Microorganism) பெண் கருவுறுப்புகளில் நுழையவிடுவதால் ஏற்படுகின்றன. நோய் நுண்மங்கள் கருவுறுப்புகளினுள் பல்வேறு வகைப்பட்ட வழிகளில் நுழைந்து கருவுறுப்புகளில் எப்பகுதியிலும் வீக்க நிலையை உண்டாக்கக்கூடும். புறக் கருவுறுப்புகளில் யோனியில், கருப்பையில், நாத குழல்களில், நாத கருவங்களின், சுற்றிலுமுள்ள தசைகளில் 1) கலவி நிகழும் போதும், 2) கீடமில்லாத நிலை (Asepsis) கீட நீக்க முறை (Antisepsis) ஆகியவைகளைக் கடைப்பிடிக்காமல் அசட்டையாக யோனி ஆய்வைச் செய்யும்போதும் இயல்பு நிலைமையைப்பிரிக்கும் நோய் நுண்மங்கள் பெண் கருவுறுப்புகளினுள் நுழைந்து விடக்கூடும். 3. பெரும்பாலும் கருச்சிதைவின் போதும் நோய் நுண்மங்கள் செலுத்தப் படுகின்றன. முன்பே யோனியில் இருப்பவை இன்னும் மேலே உள்நோக்கி செலுத்தப்படுகின்றன.

4)சில சமயங்களில் கருவுயிர்க்கும் போதும் வச்சை உடம்புத் தன்மையின் போதும் (Puerperal) மாதவிடாய் நிகழும் போதும் நோய் நுண்மங்கள் கருவுறுப்புகளின் உள்மேல் பகுதிகளுக்குச் சென்று நுழைந்து விடுகின்றன. நல்ல நிலையிலுள்ள யோனியின் உட்புறச் சவ்வும் சூழ்நிலையும் (acidity) பல்வேறு வகைப்பட்ட நோய் நுண்மங்களுக்கு ஒரு நல்ல தடுப்பாக அமைந்திருப்பதால் யோனியிலே இருக்கக்கூடிய நோய் நுண்மங்கள் எல்லா சமயங்களிலும் நோய்களைத் தோற்று விப்பது இல்லை. இது இல்லாமல் நோய் தரும் நுண்மங்கள் கருப்பை அறையினுள்ளோ (அ) சினைப்பாதையினுள்ளோ நுழைந்து விடுமேயானால் வீக்க நிலையை ஏற்படுத்துகின்றன.

5) அருகிலுள்ள உறுப்புகளிலிருந்து தொற்று நோயானது கருவுறுப்புகளில் பற்றிக் கொள்ளும் (உம்) எருக்குடலிலிருந்து, மூத்திரப்பையிலிருந்து, குடல் வால் இவை போன்ற பகுதி யிலிருந்தும் கூட இரத்தத்தின் வழியாகவும் (அ) நெறி ஊன் நீர் (lymph gland) வழியாகவும் கருவுறுப்புகளுக்கு கொண்டு வரப்படும்.(உ.ம்) சய நோயானது நுரையீரலிலிருந்து இடமாற்றம் மூலமாக கருவுறுப்புகளுக்குக் கொண்டு வரப்படுகிறது.

வீக்கத்தினால் ஏற்பட்ட நோய்கள் உள்ள நிலையில் கருவுறுப்புகளின் பல பகுதிகளும் ஒரே சமயத்தில் பெரும்பாலும் பாதிக்கப்படுகின்றன. கடுமையான நிலைகளில் தொற்று நோயானது நாத குழல்களிலிருந்து சென்று பின் வயிற்றுச் சவ்வுக் கூட்டினுள் (Peritonial Cavity) பரவுமேயானால் சில சமயங்களில் வயிற்றுச் சவ்வில் வீக்கம் ஏற்படும்.

**மருத்துவம்** கந்தக ரசாயனம், சிவனார் அமிர்தம், பலகரை, **வெளிப்பிரயோகம்**, கழுவுவதற்கு, திரிபலாச்சூரணம், அருகன் தைலம்.

### *1. சுரப்பிகளுடைய அதைப்பு* (Bartholinitis)

இது Bartholin சுரப்பிகளின் வீக்கமாகும். சாதாரணமாக

1) சுரப்பியின் ஒரு பகுதி மட்டும் தான் நோய் வாய்ப்படுகிறது.

2) வெட்டை நோய்க்கிருமிகள் சுரப்பிகளில் நுழைவதால் தான் ஏற்படுகிறது. இவ்வீக்கம் பிற வகைப்பட்ட நோய் நுண்மங்களால் ஏற்படுவது மிகக்குறைவு.

3) சுரப்பிக் குழலின் வாயானது சிவந்து இருத்தலும் சுரப்பியினோடு பக்கமாக சம்பந்தப்பட்ட புற குழலின் மேலுறை சிவந்திருந்தாலும் அவைகள் வீங்கியும் வேதனை தருவதாகும் இருப்பது இச்சுரப்பியில் உண்டாகும் வீக்கத்தின் தன்மைகளாகும்.

நோய் மிகக்கடுமையாக இருக்கும்போது கட்டி வைத்தல், வேது, ஓய்வு கொடுத்தல், சிலபோது அறுவை மருத்துவம் செய்தல். மேலும், முத்துப் பற்பம், இரசகந்தி மெழுகு, இரசச் செந்தூரம், செம்பு பற்பம், கந்தி மெழுகு, கந்தக சுடர்த் தைலம் இவற்றை வழங்கலாம்.

வெளிப்பிரயோகம் : திரிபலாக் குடிநீர், அருகன் தைலம்

## கருப்பைச் சவ்வின் வீக்கம் (கருப்பை உள் அக அழற்சி) மற்றும் கருப்பை சுவர்களின் வீக்கம் (கருப்பைத் தசை அக அழற்சி)
## Inflammation of the uterine mucosa (endometritis) and of the Uterine walls (Matritis)

தொற்று நோய்க் கிருமிகள் கருப்பைக் கழுந்தின் வழியாக நுழைந்து அங்கிருந்து கருப்பைச் சுவர்களைப் பற்றுவதால் ஏற்படுகிறது. நோயின் கடுமையான நிலையில் 1) வீக்கத்துடன் சுரமும் 2) குருதிப்பெருக்கும், குருதி கலந்து, செங்கல் நிற மங்கலான கசிவும், வடிகிறது 3) ஆராய்ந்து பார்க்கில் கருப்பையானது ஓரளவிற்குப் பெரியதாயும் வீங்கி வேதனை தருவதாயும் காணப்படுகிறது. அந்நிலையில் நோயாளிக்கு ஓய்வு தேவைப்படும். அடிவயிற்றில் பனிப்பையை வைக்க வேண்டும். தொடர்ந்து நோய் போக்கிற்கு ஏற்ப தகுதியான வீக்கம் தவிர்க்கும் முறையை நாட வேண்டும்.

### 3.கருப்பைச் சினை அழற்சி (அல்லது) கருப்பைத் துணை உறுப்புகளின் வீக்கம் (Salpingitis)

கருப்பைத் துணை உறுப்புகள் என்பது நாத குழல்களும், நாத கருவங்களுமாகும்.

**குறிகுணங்கள்** : நோயின் கடுமையான நிலையில், குத்தல், கடுமையான வலி, சுரம், சில சமயங்களில் குருதித் தேக்கம் காணப்படும். இந்நிலையில் நோயாளியைப் படுக்கையிலேயே வைத்திருக்க வேண்டும். நோய் அகற்றும் மருந்துகளும் அடிவயிற்று கீழ்ப்பகுதிகளில் குளிர்ச்சியுள்ள பொருட்களையும் வைத்தல் வேண்டும். நோயின் கடுமையான குறிகுணங்கள் தணிந்த பின் வீக்கம் தணிக்கும் மருந்துகளும் வேது கொடுத்தலும் செய்யப்படுகின்றன.

### 4. கருப்பை அகப்புற அழற்சி (Parametritis)

கருப்பை அகப்புற அழற்சியானது கருப்பையினுடைய புறநேர் (அ) ஒட்டுத் தசைகளின் வீக்கம் (Connective tissue) கருப்பைக் கழுந்தில் ஆழமான கிழிவுகள் ஏற்படுமேயானால் அதன் வழியாக நோய் நுண்மங்கள் நுழைவதனால் தான் பெரும்பாலும் ஏற்படுகின்றன. இந்நோயானது அடிவயிற்றில் கீழ்ப்பகுதியில் கடுமையான குத்துவலிகளுடனும், சிறுநீர் இறங்குவதில் தடங்கலும், மாலை நேரங்களில் காய்ச்சல் வருவதாலும், காலை நேரங்களில் உடல் வெப்பமானது மிகுதியாகக் குறைதலும் ஆகிய குறிகுணங்களோடு தொடர்கிறது. இந்நோயின் போக்கானது முற்றிவருமேயானால் சாதாரணமான வீக்கமானது சீழ் வைக்கவும் கூடும். சேர்ந்து தங்கியுள்ள சீழானது கருப்பையில் அகத்தட்டுத் தசைச் சவ்வின் வயிற்றுப் பசைச் சவ்வுகளைப் பிரித்துக் கொண்டு மேல் நோக்கிப் பரவி சிறு கூடத்திலிருந்து வெளிப்படுகிறது.(Cavity of the minor pelvis) பரிசோதனைக் காலத்தில் இந்தச் சீழை அடிவயிற்றில் பசைச் சுவர்களின் கீழாக

இடுப்பு எலும்பு, சிறுகுடல் பகுதியில் இடப்புறத்திலாவது, வலப்புறத்திலாவது (Rt or Lit iliac Region) தொட்டு அழுத்திப் தடவிப் பார்த்து உணர்ந்து அறிய முடியும்.

**பரிகாரம் :** கருப்பை புற அக வீக்கத்தில் கடுமையான நிலையில் நோயாளிக்கு ஓய்வும், நுண்ம உயிர் எதிர் மருந்துகளும், நுண்ம வளர்ச்சியைத் தடுத்து நிறுத்தும் மருந்துகளும் வேதனையைக் குறைப்பதற்கான மருந்துகளும். வேதனையைத் தணிக்கும் விதத்தில் குளிர்ச்சியான ஒற்றடங்களும் தேவைப்படுகிறது. சுரம் தணிந்த பிறகு வேது கொடுக்கும் முறை வெந்நீர்ப்பை, சூடாக்கப்பட்ட துணியைப் பயன்படுத்தலாம்.

இரசம், கந்தகம், பரங்கிப்பட்டை, சேராங்கொட்டை இவை சேர்ந்த மருந்துகளை வழங்கலாம்.

வலி இருப்பின், அபின் கஞ்சா சேர்ந்த மருந்துகளை வழங்கி தூங்கச் செய்யவும், மன்மத சிந்தாமணி, மதன காமேஸ்வர மாத்திரை கொடுககவும்.

சுரம் உள்ளபோது பிரமானந்த பைரவ மாத்திரை/லிங்கச் செந்தூரம் வழங்கலாம். சாதாரணமாக இந்த அளவிற்குச் செய்யப்படும் மருத்துவமானது கருப்பைப் புறவீக்கத்தை நீக்கி விடுகிறது. ஆயினும் சீழ் பிடித்திருந்தால் அறுவை மருத்துவம் சில சமயங்களில் தேவைப்படுகிறது. அதாவது தேங்கியுள்ள சீழை வெளியிற் கொண்டு வருவதற்கு ஒரு வழியை ஏற்படுத்த யோனியின் வழியாகவாவது (அ) அடிவயிற்றின் வழியாக வாவது மருத்துவம் செய்யப்படுகிறது. இடுப்புக் கூட்டின் தசைச் சவ்வில் தொற்றுநோய் நுண்மங்கள் நுழையுமாகில் அது இடுப்புச் சுடு தசைச் சவ்வில் அழற்சியை ஏற்படச் செய்கிறது.

## 5. இடுப்புக் கூட்டுப் பசைச் சவ்வின் வீக்கம்

(Inflammation of the pelvic Peritonium)

இடுப்புக் கூட்டு பசைச்சவ்விலும் தொற்று நோயானது நுழையுமானால் அது இடுப்புக்கூட்டுப்பசைச்சவ்வு அழற்சியை

(அல்லது)வீக்கத்தை ஏற்படச்செய்கிறது. இந்நோயானது அடிவயிற்றின் கீழ்ப்பகுதியில் கடுமையான குத்துவலியோடும், அடிவயிற்றில் வீக்கமும், நீர்ச்சுருக்கும் காணப்படுவதோடு ஆரம்பிக்கின்றது. அடிவயிறானது கையால் தொட்டுப் பார்க்க முடியாத அளவிற்கு மிகுதியான வலியுடன் கூடியதாக காணப்படுகிறது. அடிவயிற்றின் கீழ்ப்பகுதியானது சுவாசிக்கும் போது (Abdominal Respiration) அசைவுகளில் ஈடுபடுவதில்லை. சுரமும், அடிக்கடி வாந்தியும், நாவில் மாப்படிந்தும் காணப்படும் இந்நோயுற்றவர்க்கு முழு ஓய்வும், ரசம், முப்பு போன்ற நோய் தீர்க்கும் மருந்துகளும், அடிவயிற்றின் சுவரின் மேல்பட்டும் படாமலும் அடிவயிற்றில் குளிர்ச்சி ஒற்றடம் தேவைப்படும்.

இந்த இடுப்புக் கூட்டின் பசைச்சவ்வில் ஏற்படும் வீக்கத்தின் விளைவாக இதைத் தொடர்ந்து கருப்பைக்கும், நாதக்குழல்களுக்கும், நாதக்கருவகங்களுக்கும், சிறு குழல்களுக்கும் இடையிலும் பல தடைகளிலும் வயிற்றுப் பசைச் சவ்வின் மடிப்புகளுக்கும் இடையிலும் ஒட்டுவைகள் (Adhesion) ஏற்படுகின்றன. இவை கருப்பை அகப்புற ஒட்டுவைகள் (Parametric Adhesion) என்று அழைக்கப்படும்.

### 6. கருப்பைக் கழுந்து உள்புற அழற்சி (அ) அதைப்பு

( Endocervicitis )

கருப்பைக் கழுந்து உள்புற அழற்சியானது கருப்பைக் கழுந்து குழலினுடைய உட்புற பசைச் சவ்வின் வீக்கமாகும். நோயாளிகள் தங்களுக்கு மிகுந்த வெள்ளைத் தீட்டுப்படுவதாக முறையிடுவார்கள்.

1. கருவுயிர்க்கும் காலத்தில் கருப்பைக் கழுந்தில் ஏற்பட்ட கிழிசல்கள் தைக்காது விடப்பட்ட இடத்திலும்,

2. கருப்பைக் கழுந்தின் புறம் கவிழ்தல்கள் ஏற்பட்ட நிலையிலும்,

3. கருச்சிதைவுக் காலங்களில் அது பிய்ந்து போன நிலைகளிலும் (Rupture)

4.கருப்பைக் கழுந்து குழலின் உட்புறமிகுந்து பல்தால் தசை சினைத்தும் (தான்றி வளர்தலும் Polypi) இந்நோயின் வளர்ச்சிக்குச் சாதகமான கூறுகளாகும்.

5. வந்தைகளால் தாபிதம் ஏற்படுவதாலும்,

6. குடும்பக் கட்டுப்பாடு சாதனங்கள் நீண்ட காலமாகப் பயன்படுவதாலும் ஏற்படும்.

கருப்பைக் கழுந்து குழலின் உட்புறம் பசைச் சவ்வின் வீக்கத்தோடு அதிலிருந்து இடைவிடாது வடிந்து கொண்டிருக்கும் கசிவுகள் கருப்பைக் கழுந்தின் வெளிவாய்ப் பகுதியில் (External) அரிப்பு ஏற்படும். இதனால் புண்களை உண்டாக்குகின்றன. கருப்பைக் கழுந்தின் வாயில் தனியாய் பிரிக்கப்பட்ட ஒரு பகுதியில் சிறிய நீர்க் கொப்புளங்கள் போன்று சில சமயங்களில் கண்டு அறியப்படுகின்றன. இவை நுண்பைகள் (அ) சிறுபைகள் எனப்படும்.

### கருவுறுப்பு அதிர்ச்சிக் கோளாறுகள் :

கருவாயின் பின் கீழ்ப்பகுதி கிழிசல்களையும் (Perineal Laceration) கருப்பைக் கழுந்தின் கிழிசல்களையும், புரை புண்களையும், பவுந்திரங்களையும் இதில் சேர்க்கலாம்.

பச்சை உடம்புத் தன்மையானது நல்லமுறையிலே இருக்குமேயானால் மகப்பேற்றின் கீழ் தைக்கப்படாது விடப்பட்ட கருவாய் பின் கீழ்ப்பகுதி கிழிசல்கள் துவக்க நிலையில் மாதர்க்கு யாதொரு தொந்தரவையும் கொடுப்ப தில்லை. ஆனாலும் பின்னர் இத்தகைய கிழிசல்கள் கடிதட சுவர்களில் இறக்கங்களை உண்டு பண்ணுகின்றன. எனவே மகப்பேற்றின் கண் நிகழக்கடிய இவ்வாறான கருவாய் பின்பகுதி கிழிசல்களைத் தைத்துவிட வேண்டியது அவசியம்.

பெரும்பாலும் மகப்பேறு காலத்தில் கருப்பைக் கழுந்தும் கூட கிழிந்து விடுகிறது. இந்தக் கிழிசல்கள் பேற்றின் பின் நிகழக்கூடிய குருதிப்பெருக்குகளை எல்லாச்சமயத்திலும் உண்டு பண்ணுவதில்லை. ஆகையினால், அவைகள் கண்டு பிடிக்கப் படாமலேயே இருந்து வருகின்றன. அக்காரணம் பற்றி அவைகளும் காலாகாலத்தில் தைக்கப்படுவதில்லை. இதைத் தொடர்ந்து கிழிந்த இடத்தில் கருப்பைக் கழுந்து குழலானது திறந்தபடி இருக்கிறது. யோனியிலுள்ள நோய் நுண்மங்களால் நோய் தோற்று விக்கப்படுகிறது. கருப்பைக்கழுந்து பச்சைப்படலத்தில் (Mucous) வீக்கம் ஏற்படுகின்றது. கசிவுகள் மிகுதியாக வருகின்றன. சில சமயங்களில் மிகுதியான களைப்பை உண்டுபண்ணும் அளவிற்கு வெள்ளைத் தீட்டானது படுகிறது. இவ்வாறான கிழிசல்கள் உள்ள நிலையில் கருப்பைக் கழுந்தானது தைக்கப்படல் வேண்டும். ஆனால் வேறு நிலைகளிலோ கருப்பைக் கழுந்தின் ஒரு பகுதியையே அறுத்து எடுத்து விடல் ஏற்படலாம்.

இவ்வாறான சிக்கல்கள் ஏற்படாமல் தடுப்பதற்கான குருதிப் பெருக்கு இருக்கிறதோ அல்லது இல்லையோ அதை மட்டும் கவனித்துக் கொள்ளாமல் பிள்ளை பிறந்தவுடன் ஒவ்வொரு பெண்ணின் கருப்பைக் கழுந்தும் ஆய்ந்து அறியப்படல் வேண்டும். கிழிசல்கள் காணப்படுமேயானால் உடன் தைக்கப்படல் வேண்டும்.

### *4. புரைப்புண்கள் (அ) பவுத்திரங்கள்* (Fistula)

மூத்திரப்பையிலும், எருக்குடலும், புரைப்புண்கள் வருவது அசாதாரணமாக அஞ்சத்தக்க சிக்கல்கள் தருவதாகும். காரணம்.

1) இளமங்கையரிடம் சரியாக திறமையுடன் கருவுயிர்ப்பை நிகழ்த்தாத உள்வாயில் கருக்குழவியின் தலையானது வெகுநேரம் பொருத்தி இருப்பினும்,

2) தலையின் அளவிற்கும் இடுப்புக்கூட்டின் அளவிற்கும் உள்ள வேறுபாடும் (குறுகிய இடுப்புக் கூடு) சுற்றிலும் உள்ள தசைக்கும், இடுப்புச் சிறுகூட்டிலுள்ள உறுப்புகளுக்கும், கேட்டை விளைவிக்கும். வழக்கமாக சிறுநீர்ப்பை தான் முதலாவதாக பாதிக்கப்படுகிறது. இதனால் மூத்திரக் கடிதட புரைப்புண் (Vesico - Vaginal Fistula) ஏற்படுகிறது. சமயங்களில் எருக்குடலும் பாதிக்கப்படுகிறது. அந்நிலையில் எருக்குடல் கடிதட பவுத்திரம் ஏற்படுகிறது (Recto-Vaginal Fistula) கவனித்து விடப்பட்ட நஞ்சுத் தன்மையுள்ள புதுக்கட்டிகளால் மூத்திரப்பையினுடைய சுவர் வழியாகவோ (அ) எருக்குடலின் சுவர் வழியாகவோ வளருகின்றன. மூத்திரப்பை புரைப் புண்ணின் முக்கிய குறிகுணங்கள் யாதெனில் கடிதடத்தின் வழியாக சிறுநீரானது தானே கழிவதாகும். எருக்குடல் கடிதட புரைப்புண் ஏற்பட்டுள்ள நிலைகளில் எருக்குடலில் தங்கியுள்ள பொருள்கள் கடிதடத்துள் நுழைந்துவிடுகின்னறன. கடிதட கசிவானது மலத்தின் மணத்தை வீசுகின்றது. புரைப்புண்ணானது தானாகவே மூடிக்கொள்ளாவிடில் அறுவை மருத்துவம் செய்ய வேண்டும்.



**இந்திய மருத்துவம் - ஓமியோபதித் துறை நூலகங்களில் விற்பனையாகும் நூல்களின் விலை விவரப்பட்டியல்**

| வ.எண் | நூல்களின் பெயர் | எடை (கிராமில்) | விலை ரூ.பை |
|---|---|---|---|
| 1. | குணபாடம் - மூலிகை | 800 | 300.00 |
| 2. | குணபாடம் - தாது சீவ வகுப்பு | 800 | 250.00 |
| 3. | நோய்களுக்குச்சித்த பரிகாரம் - பாகம்.1 | 700 | 200.00 |
| 4. | நோய்களுக்குச்சித்த பரிகாரம் - பாகம்.2 | 200 | 25.00 |
| 5. | நோய் நாடல் நோய் முதனாடல் திரட்டு - பாகம்.1 | 500 | 200.00 |
| 6. | நோய் நாடல் நோய் முதனாடல் திரட்டு - பாகம்.2 | 800 | 250.00 |
| 7. | சிறப்பு மருத்துவம் | 500 | 220.00 |
| 8. | மகளிர் மருத்துவம் | 450 | 160.00 |
| 9. | நோயில்லா நெறி | 500 | 67.20 |
| 10. | சட்டம் சார்ந்த மருத்துவமும் நஞ்சுநூலும் | 800 | 250.00 |
| 11. | சித்த வைத்திய திரட்டு | 500 | 150.00 |
| 12. | சூல் மருத்துவம் | 450 | 150.00 |
| 13. | அறுவை மருத்துவம் | 500 | 150.00 |
| 14. | குழந்தை மருத்துவம் | 800 | 210.00 |
| 15. | பதார்த்த குண சிந்தாமணி | 700 | 150.00 |
| 16. | வர்மத்தொகுப்பு | 700 | 150.00 |
| 17. | உடற்கூறு | 1000 | 400.00 |
| 18. | நஞ்சு முறிவு நூல் | 300 | 100.00 |
| 19. | உடல் தத்துவம் | 450 | 75.15 |
| 20. | பிள்ளைப்பிணி மருத்துவம் - பாகம்.1 | 500 | 78.25 |
| 21. | பிள்ளைப்பிணி மருத்துவம் - பாகம்.2 | 800 | 250.00 |
| 22. | சித்த மருத்துவம் - பொது | 800 | 250.00 |
| 23. | யூகி வைத்திய சிந்தாமணி | 500 | 150.00 |
| 24. | தேரையர் யமக வெண்பா- பாகம்.1 | 300 | 80.00 |
| 25. | கடுக்காய் வல்லாரையின் தனி மாண்பு | 500 | 150.00 |
| 26. | நல்வாழ்விற்கு ஓர் நல் மருத்துவம் | 50 | 100 |

| | | | |
|---|---|---|---|
| 27. | பிணி உடல் தேர்வக ஆய்வு முறைகள் | 50 | 30.30 |
| 28. | அகத்தியர் ஒடிவு முறிவு சாரி நிகண்டகராதி | 400 | 80.00 |
| 29. | தோற்றக்கிராம ஆராய்ச்சியும் சித்த மருத்துவ வரலாறும் | 500 | - |
| 30. | சித்த மருத்துவாங்கச்சுருக்கம் | 800 | 300.00 |

## Siddha Medical Books in English

| | | | |
|---|---|---|---|
| 1. | A Compendium of Siddha Doctrine | 500 | 200.00 |
| 2. | Introduction to Siddha Medicine | 50 | 11.35 |
| 3. | Simple Home Remedies | 50 | 2.70 |
| 4. | Hospital Siddha Pharmacopoeia in Indian Medicine | 250 | 39.00 |
| 5. | History of Siddha Medicine | 800 | 159.00 |
| 6. | Siddha Science of Longevity and Kalpa Medicine | 250 | 25.00 |
| 7. | Siddha Toxicology | 500 | 44.00 |
| 8. | Siddha Principles of Social & Preventive Medicine | 500 | 66.00 |
| 9. | Siddha Medical Dictionary T.V. Sambasivam Pillai - Vol.I | 2500 | 623.00 |
| 10. | T.V. Sambasivam Pillai - Vol.II - Part I | 500 | 300.00 |
| 11. | T.V. Sambasivam Pillai - Vol.II - Part II | 450 | 200.00 |
| 12. | T.V. Sambasivam Pillai - Vol.III | 650 | 81.00 |
| 13. | T.V. Sambasivam Pillai - Vol.IV - Part I | 800 | 156.00 |
| 14. | T.V. Sambasivam Pillai - Vol.IV - Part II | 800 | 151.50 |
| 15. | T.V. Sambasivam Pillai - Vol.V | 1200 | 480.00 |

## ஆயுர்வேத நூல்கள் (தமிழில்)

| | | | |
|---|---|---|---|
| 1. | சரக சம்ஹிதை - பாகம் - 1 | - | - |
| 2. | சரக சம்ஹிதை - பாகம் - 2 | 1400 | 253.65 |
| 3. | சரக சம்ஹிதை - பாகம் - 3 | 1700 | 390.00 |
| 4. | சுசுருத சஹிறிதை - பாகம் - 1 | 1500 | 390.00 |
| 5. | சுசுருத சஹிறிதை - பாகம் - 2 | 1400 | 272.00 |

மேற்குறிப்பிட்ட நூல்களை நேரிலோ அல்லது பதிவுத் தபாலிலோ பெற்றுக் கொள்ளலாம். பதிவுத் தபாலில் புத்தகங்கள் வேண்டுவோர் புத்தகங்களின் விலையோடு தபால் கட்டணத்தையும் சேர்த்து பண விடை (எம்.ஓ) அல்லது டி.டி மூலம் அனுப்ப வேண்டும். வி.பி.பியில் அனுப்ப இயலாது. 2 கிலோவுக்கு மேல் எடையுள்ள புத்தகங்கள் தபாலில் அனுப்ப இயலாது.

**தபால் கட்டணம்**

முதல் 500 கிராமுக்குள் - ரூ. 36.00

500 கிராமுக்கு மேல் ஒவ்வொரு 50 கிராமுக்கும் - ரூ. 16.00

**பணம் அனுப்ப வேண்டிய முகவரி**

இயக்குநர்,
இந்திய மருத்துவம் - ஓமியோபதித்துறை,
அரும்பாக்கம், சென்னை - 600 106.
தொலை பேசி 044 - 2621 4844 / 2621 6244 / 2628 1563

முதல்வர்,
அரசினர் சித்த மருத்துவக் கல்லூரி,
பாளையங்கோட்டை, திருநெல்வேலி - 627 002.
தொலை பேசி: 0462 - 2572736 / 2572737 / 2572738



